ஸ்ரீ:

# ஸ்ரீ ருத்ரம்

## ॥ श्रीरुद्रप्रश्नः ॥

உரையாசிரியர்

“அண்ணா”



ாமகிருஷ்ண மடம்

ாப்பூர் : : சென்னை-4

ஸ்ரீ:

# ஸ்ரீ ருத்ரம்



## ॥ श्रीरुद्रप्रश्नः ॥

(பதவுரை குறிப்புகளுடனும் நமகம், சமகம், லகுந்யாஸம், ருத்ரவிதான பூஜை, சிவபரமான ஸ்தோத்திரங்கள், ஜபவிதானம் முதலியவற்றுடன் கூடியது.)

உரையாசிரியர்

"அண்ணா"






ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் : : சென்னை-4

இது சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்துத் தலைவரால்
பிரசுரிக்கப்பட்டது.

முதல் பதிப்பு 1962
மறுவெளியீடு 1965



II—4200—4-'65.

சாதாரண பைண்டு ரூ. 2-00. காலிகோ ரூ. 3-0-0.

இது சென்னை திருவல்லிக்கேணி
பாரதி விஜயம் பிரஸ்ஸில் அச்சிடப்பட்டது.

# பொருளடக்கம்


பக்கம்

குறிகளின் விளக்கம் ... iv
முகவுரை ... v

ஸ்ரீருத்ரம்

ந்யாஸம் ... 1
சாந்திபாடம் ... 6
ஸ்ரீ ருத்ரநமகம் ... 8
சமகம் ... 79

அநுபந்தம்

ஸூக்தங்கள்

1. ருக்வேதீய ருத்ரஸூக்தங்கள் ... 107
2. தேவீ ஸூக்தம் ... 115

பூஜையும் அர்ச்சனையும்

3. லகுந்யாஸம் ... 116
4. ஸ்ரீ ருத்ரவிதான பூஜா ... 124
5. ஸ்ரீ ருத்ரத்ரிசதீ ... 134
6. சிவாஷ்டோத்தர சதநாமாவளி ... 145
7. ஸ்ரீ நடராஜாஷ்டோத்தர சதநாமாவளி ... 149
8. ஸ்ரீசிவகாமஸுந்தர்யஷ்டோத்தர சதநாமாவளி ... 153
9. கணேச அஷ்டோத்தர சதநாமாவளி ... 157

ஸ்தோத்ரங்கள்

10. கணேச ஸ்தோத்ரம் ... 161
11. ஸுப்ரஹ்மண்ய ஸ்தோத்ரம் ... 162
12. சிவகவசம் ... 164
13. பஞ்சாக்ஷரஸ்தோத்ரம் ... 177
14. சிவமானஸ பூஜா ... 179
15. விச்வநாதாஷ்டகம் ... 181
16. லிங்காஷ்டகம் ... 183
17. அர்த்தநாரீச்வர ஸ்தோத்ரம் ... 185
18. சரணச்ருங்கரஹித நடராஜ ஸ்தோத்ரம் ... 187
19. மார்க்கபந்து ஸ்தோத்ரம் ... 193
20. சந்த்ரசேகராஷ்டக ஸ்தோத்ரம் ... 195
21. சிவாபராத க்ஷமாபன ஸ்தோத்ரம் ... 199
22. ஜபவிதானம் ... 205

## குறிகளின் விளக்கம்

ஓ.—ஒப்பிடுக

கீ.—ஸ்ரீமத் பகவத்கீதை

ஸா.—ஸாயணாசாரியார் வேதபாஷ்யம்

வி. ஸ. விஷ்ணுஸஹஸ்ரநாமம்

சங்.—சங்கராசாரியர்

ஈச. உப.-ஈசாவாஸ்ய உபநிஷத்து

கேன. உப.—கேன உபநிஷத்து

கைவல்ய உப.—கைவல்ய உபநிஷத்து

தை. ஸம்.—தைத்திரீய ஸம்ஹிதை

## ஸ்வரங்கள்

வேத மந்திரங்களின் ஸ்வரங்கள் ஸம்ஸ்கிருத அக்ஷரங்களின் மேலும் கீழும் சிறு கோடுகளால் குறிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றை உச்சரிக்கும் முறையை வேதத்தை அத்தியயனம் செய்தவர்களிடம் கேட்டுக் கற்றுக்கொள்ள வேண்டும்.

அனுதாத்தம் — எழுத்துக்குக் கீழ் இக்குறி இருந்தால் ஸ்வரத்தை இறக்கி உச்சரிக்க வேண்டும்.

ஸ்வரிதம் | எழுத்துக்குமேல் இக்குறி இருந்தால் ஸ்வரத்தை மேலே தூக்கி உச்சரிக்க வேண்டும்.

தீர்க்கஸ்வரிதம் || எழுத்துக்குமேல் இக்குறி இருந்தால் தூக்கியும் நீட்டியும் உச்சரிக்க வேண்டும்.

# முகவுரை

யஜுர்வேதத்தின் தலைசிறந்த பகுதியாகக் கருதப் படுவது ஸ்ரீருத்ரம். யஜுர்வேத தைத்திரீய ஸம்ஹிதை ஏழு காண்டங்களுள் நாலாவது காண்டத்தின் நடு நாயக மாக உள்ளது இது. இதனுடைய இருதய ஸ்தானத்தி லிருப்பது சிவ பஞ்சாக்ஷர மந்திரம். இக்காரணம்பற்றி இது ஆஸ்திகர்களால் நித்திய பூஜையிலும், ஜபத்திலும், ஹோமத்திலும் தொன்று தொட்டுச் சிறப்பாகக் கையாளப் பட்டு வருகிறது. தினந்தோறும் அவசியம் பாராயணம் செய்யவேண்டியதாகக் கொள்ளப்படுபவைகளுள் இது முக்கியஸ்தானம் வகிக்கிறது.

ஸ்வசாகோபநிஷத்-கீதா விஷ்ணோர்நாம-ஸஹஸ்ரகம் |
ருத்ரஞ்ச பௌருஷம்ஸூக்தம் நித்ய-மாவர்த்தயேத் புத : ||

அவரவர் சாகையிலுள்ள உபநிஷத்து, கீதை, விஷ்ணு ஸஹஸ்ரநாமம், ருத்ரம், புருஷ ஸூக்தம் ஆகிய ஐந்தும் நித்தியம் புத்திமானால் திருப்பித் திருப்பி உருவேற்றுதற் குரியவை என்று முதியோர் கூறுகின்றனர்.

ஸ்ரீருத்ரம் 'ருத்ரோபநிஷத்' என்றும் 'சதருத்ரீயம்' என்றும் சிறப்புப் பெயர் வாய்ந்தது. ஸம்ஸாரத் தளைகளை நீக்கி முக்திக்குச் சாதனமாவதால் இது உபநிஷத்தாகிறது. யஜுர்வேத சாகைகள் நூற்றி யொன்றிலும் வேறு பல வேத சாகைகளிலும் இது படிக்கப் படுவதாலும், நூற்றுக் கணக்கான வடிவங்களில் ஸ்ரீருத்ரன் இங்கு போற்றப் படுவதாலும் இது 'சதருத்ரீயம்' எனப்படுகிறது.

ஏகசதம் யஜு: சாகாஸ்-தாஸு ருத்ரோபநிஷ-தாம்னயதே|
சதசாகா-கதம் ஸாக்ஷாச் சதருத்ரீய-முச்யதே ||

ஒரு மரத்தின் வேரில் நீரூற்றினால், கிளைகள் செழிப் பதுபோல், ஸ்ரீ ருத்ரஜபத்தால் எல்லா தேவதைகளும்

திருப்தியடைகின்றனர் என்று ஸூதஸம்ஹிதை கூறு கிறது.

வ்ருக்ஷஸ்ய மூலஸேகேன சாகா: புஷ்யந்தி வை யதா |
சிவே ருத்ரஜபாத் ப்ரீதே ப்ரீதா ஏவாஸ்ய தேவதா:||
அதோ ருத்ர-ஜபாதேவ புக்தி-முக்தீ ப்ரஸித்யத: ||

இந்த ஜபமே பாவங்களுக்குச் சிறந்த பிராயச் சித்த மாகவும் விதிக்கப்பட்டுள்ளது.

'ய: சதருத்ரீய-மதீதே ஸோऽக்னி-பூதோ பவதி, ஸ வாயு பூதோ பவதி, ஸ ஆத்ம-பூதோ பவதி, ஸ ஸுராபாநாத் பூதோ பவதி, ஸ ப்ரஹ்மஹத்யாத் பூதோ பவதி' (கைவல்யோபநிஷத்)

ஆகையால் யார் யார் எந்தப்பயனை விரும்பினாலும் இதை ஜபித்துக் காரியசித்தி பெறலாம். (தம் நம இத் யுபாஸீத, நம்யந்தேऽஸ்மை காமா:) ஈசுவரனை 'நம: நம:' என்று வணங்கி ஆராதித்தால் அப்படி ஆராதிப்பவனை எல்லாக் காமங்களும் வந்து வணங்கி நிற்கும் என்று தைத்திரீயோபநிஷத்துக் கூறுகிறது. அப்படி ஆராதிப் பதற்குச் சிறந்த ஸாதனம் ஸ்ரீருத்ரம்.

பிரம்மாண்டம் முழுவதும் பரவிய சரீரம், விபூதிப் பூச் சால் பனியையொத்த ஒளி, ஸர்ப்பாபரணங்கள், கறுத்த கழுத்து, பிறைச்சந்திரனைச் சூடிய ஜடாமுடி, வில்லேந்திய கைகள், முக்கண், ருத்ராக்ஷமாலை, இவற்றுடன் கூடிய வடிவத்தில் ஈசுவரனை தியானித்து ஸ்ரீ ருத்ரத்தால் போற்றி னால் எல்லா நன்மைகளும் கைகூடும். அவர் அனைத்திற் கும் முதலாகியவர், பிறவிப் பிணிக்கு வைத்தியர், பக்தர் களின் குற்றத்தை மறந்து குணத்தைக் கொண்டாடுபவர். அவரே நாள்தோறும் நாம் காணும் சூரியனாக உதிக்கிறார். அவர் கொள்ளும் ரூபங்கள் எண்ணிலடங்கா. உலகில் காண்பதெல்லாம் அவர் வடிவேயாம். திருடர் முதலியவர் களுடைய உடல்களிலும் கூட இரண்டு வடிவில் அவர் ஜீவரூபியாகவும் ஈசுவர ரூபியாகவும் இருக்கிறார். அங்ஙனம் சிந்திப்பதால் உலகிலுள்ள தீமை ஜயிக்கப்படும்.

எவர் சிறியர் எவர் பெரியர் எவருறவர்
எவர் பகைஞர் யாது முனையன்றி யுண்டோ
இகபர மிரண்டினிலு முயிரினுக்குயிராகி
எங்கு நிறைகின்ற பொருளே. (தாயுமானவர்)

உட்கார்ந்து கொண்டிருப்பவர்களாகவும், படுத்துக் கொண்டிருப்பவர்களாகவும், தூங்குகிறவர்களாகவும், விழித்துக் கொண்டிருப்பவர்களாகவும், நின்று கொண்டிருப்பவர்களாகவும் ஓடுகிறவர்களாகவும், ஸபையிலுள்ளவர்களாகவும், ஸபாநாயகராகவும், தச்சர்களாகவும், குயவர்களாகவும், வேடர்களாகவும், செம்படவர்களாகவும், எல்லாமாகவும் அவரே இருக்கிறுர் என்று ருத்ரம் கூறுகிறது. அற்பம் அற்பமன்று. அவரை ஆராதிப்பதற்குத் தும்பைப் பூவும், எருக்கம் பூவும், ஊமத்தம் பூவுங்கூட உதவும்.

ஸ்ரீருத்ரத்தின் முதல் அனுவாகத்தில் ஈசுவரனுடைய கட்டளையை மீறி நடந்தவர்களிடம் கோபங்கொண்ட அவர் பிரசன்னராக வேண்டுமென்ற பிரார்த்தனையும், இரண்டாவது அனுவாகம் முதல் ஒன்பதாவது வரை அவருடைய ஸர்வேசுவரத்வம், ஸர்வ சரீரத்வம், ஸர்வாந்தர்யாமித்வம் முதலியவற்றைக் குறிக்கும் நாமங்களால் நமஸ்காரமும், பத்தாவதில் பிரஸன்னரான ஈசுவரனிடம் இஷ்டப்பிராப்தி அனிஷ்ட நிவிருத்திக்காகப் பிரார்த்தனையும், பதினொன்றில் ருத்ரகணங்களுக்கு நமஸ்காரமும் கூறப்படுகின்றன.

ஸ்ரீ ருத்ர பாராயணம் சமக பாராயணத்துடன் கூடித்தான் பரிபூர்ண பலனை யளிக்கிறதென்று பெரியோர் கூறுகின்றனர். ஸ்ரீ ருத்ர ஜபத்திற்கு ஐந்து வடிவம் கூறப்படுகிறது. ருத்ரத்தையும் அதற்குப் பின் சமகத்தையும் பாராயணம் செய்வது சாதாரண ரூபம். ஒருமுறை ருத்ரத்தின் பதினொரு அனுவாகத்தையும், ஜபித்துப் பிறகு சமகத்தின் முதல் அனுவாகத்தையும், இரண்டாவது முறை அங்ஙனம் ஜபித்துச் சமகத்தின் இரண்டாவது அனுவாகத்தையும், அவ்வாறுகப் பதினொருவது முறை ஜபித்துப் பதினொன்ருவது அனுவாகத்தையும் பாராயணம் செய்தால் அது

‘ ருத்ரைகாதசினீ ’ எனப்படும். பதினொரு ருத்ரைகாதசினீ சேர்ந்தால் அது லகு ருத்ரம். பதினொரு லகு ருத்ரம் ஒரு மகா ருத்ரம். பதினொரு மகா ருத்ரம் ஒரு அதி ருத்ரம்.

ஸ்ரீ ருத்ரத்திற்குள்ள உரைகளில் ஸாயணாசாரிய ருடைய வேத பாஷ்யத்திலுள்ள உரையும், அபிநவ சங்கரா சாரியருடைய உரையும், பட்டபாஸ்கரருடைய உரையும், விஷ்ணுஸூரி என்பவருடைய உரையும் நமக்கு இப்போது அச்சில் காணக் கிடைக்கின்றன. அவ்வுரைகளிலுள்ள முக்கியமான கருத்துக்கள் இந்நூலில் எடுத்துக் கூறப்பட் டுள்ளன. அனுபந்தத்தில் பஞ்ச ருத்ரம் எனப்படும் ருக் வேத ருத்ரஸூக்தங்களும், லகுந்யாஸமும், ருத்ரவிதான பூஜையும், ருத்ரத்ரிசதீ, சிவாஷ்டோத்தரம், தேவீ அஷ்டோத் தரம், கணேச அஷ்டோத்தரம், சிவகவசம் இன்னும் சிவபர மான ஸ்தோத்திரங்களும் ஜபவிதானமும், ஸாதகர்களுக் குப் பயன்படும் வகையில் சேர்த்து அச்சிடப்பட்டிருக்கின் றன.

ஸம்ஸ்கிருதத்தில் அதிகப் பயிற்சி இல்லாதவர் களுக்கும் ஸ்ரீ ருத்ர சமக மந்திரங்களைத் தமிழில் விளக்கு வதற்காக மூலம் முதலில் நாகர எழுத்திலும் அதனடியில் தமிழ் எழுத்திலும் அச்சிடப்பட்டிருப்பதுடன் பதவுரை யும், வியாக்கியானக்குறிப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன. ஒப்பிட்டுப் படிப்பதற்கு உபயோகமாயிருக்கும் வகையில் மேற்கோள்களும் உவமைகளும் எடுத்துக் காட்டப்பட் டிருக்கின்றன.

அச்சிடும்போது பிழைதிருத்துவதில் உதவிய பிரம்மஸ்ரீ வழுத்தூர் ராஜகோபால சர்மா அவர்களுக்கும் அச்சிட்டுத் தந்த ‘ பாரதி விஜயம் ’ அச்சுக் கூடத்தாருக்கும், இந்நூலைப் பயன்படுத்தி என் முயற்சியை ஸார்த்தகமாக்கும் அன்பர் களுக்கும் என் நன்றி உரித்தாகும்.

உரையாசிரியர்.

ஸ்ரீராமகிருஷ்ண மாணவரில்லம்,
மயிலாப்பூர், சென்னை-4.
ப்லவஸ்ரீ மார்கழி 12௳
27—12—1961.

|| श्रीः ||

# || श्रीरुद्रप्रश्नः ||

## || न्यासः ||

अस्य श्रीरुद्राध्याय-प्रश्न-महामन्त्रस्य, अघोर ऋषिः, अनुष्टुप्छन्दः, सङ्कर्षणमूर्तिस्वरूपो योऽसावादित्यः परमपुरुषः स एष रुद्रो देवता ॥

नमः शिवायेति बीजम् । शिवतरायेति शक्तिः । महादेवायेति कीलकम् । श्री-सांबसदाशिव-प्रसादसिद्ध्यर्थे जपे विनियोगः ॥ १ ॥

ஶ்ரீ:

# || ஶ்ரீ ருத்ரப்ரச்ன: ||

## || ந்யாஸ: ||

அஸ்ய ஶ்ரீருத்ராத்யாய - ப்ரச்ன - மஹாமந்த்ரஸ்ய, அகோரருஷி:, அனுஷ்டுப் ச்சந்த:, ஸங்கர்ஷணமூர்த்தி-ஸ்வரூபோ யோऽஸாவாதித்ய: பரமபுருஷ: ஸ ஏஷ ருத்ரோ தேவதா ||

நம: சிவாயேதி பீஜம் | சிவதராயேதி சக்தி: |

மஹாதேவாயேதி கீலகம் | ஶ்ரீஸாம்ப-ஸதாசிவ-ப்ரஸாத ஸித்த்யர்த்தே ஜபே விநியோக: ||1||

---

## ஶ்ரீ ருத்ரப்ரச்னம்

### நியாஸம்

ஶ்ரீருத்ராத்யாயப்ரச்ன மஹாமந்திரமாகிய இதற்கு அகோரர் ரிஷி; அனுஷ்டுப் சந்தம்; ஸங்கர்ஷண மூர்த்தி ஸ்வரூபராகிய எந்த ஆதித்திய பரமபுருஷர் நம்முன் பிரத்யக்ஷமாய்த் தோன்றுகிறாரோ அவரே ருத்ரராகிய தேவதை. 'நம: சிவாய' என்பது பீஜம்; 'சிவதராய' என்பது சக்தி; 'மஹா தேவாய' என்பது கீலகம்; ஶ்ரீஸாம்பஸதா

ओं अग्निहोत्रात्मने अङ्गुष्ठाभ्यां नमः ।
दर्शपूर्णमासात्मने तर्जनीभ्यां नमः ।
चातुर्मास्यात्मने मध्यमाभ्यां नमः ।
निरूढपशुबन्धात्मने अनामिकाभ्यां नमः ।
ज्योतिष्टोमात्मने कनिष्ठिकाभ्यां नमः ।
सर्वक्रत्वात्मने करतलकरपृष्ठाभ्यां नमः ॥ २ ॥

एवं हृदयादि-न्यासः ॥ ३ ॥

ஓம் அக்னி-ஹோத்ராத்மனே அங்குஷ்டாப்யாம் நமஃ |
தர்சபூர்ணமாஸாத்மனே தர்ஜனீப்யாம் நமஃ |
சாதுர்மாஸ்யாத்மனே மத்யமாப்யாம் நமஃ |
நிரூட-பசு-பந்தாத்மனே அநாமிகாப்யாம் நமஃ |
ஜ்யோதிஷ்டோமாத்மனே கனிஷ்டிகாப்யாம் நமஃ |
ஸர்வக்ரத்வாத்மனே கரதலகரப்ருஷ்டாப்யாம் நமஃ ||2||
ஏவம் ஹ்ருதயாதி-ந்யாஸஃ ||3||

---

சிவரின் திருவருள் சித்திக்கும் பொருட்டு ஜபத்தில் இதற்கு உபயோகம்.

'அக்னிஹோத்ராத்மனே,' 'தர்சபூர்ணமாஸாத்மனே',
'சாதுர்மாஸ்யாத்மனே,' 'நிரூடபசுபந்தாத்மனே'
'ஜ்யோதிஷ்டோமாத்மனே,' 'ஸர்வக்ரத்வாத்மனே',

என்று கரநியாஸமும் அங்க நியாஸமும் செய்து, 'பூர்ப்புவஸ்ஸுவரோம்' என்று தீமைகள் அணுகாவண்ணம் 'திக்பந்தம்' செய்க. (2-3)

---

அக்னிஹோத்ரம், தர்சபூர்ணமாஸம், பசுபந்தம், சாதுர்மாஸ்யம், ஜ்யோதிஷ்டோமம் முதலிய கர்மாக்கள் எல்லாம் ஸ்ரீருத்ரத்தின் ஹ்ருதயம் முதலிய அங்கங்களாக நியாஸம் செய்யப்படுவதால், இக்கர்மாக்களெல்லாவற்றாலும் உண்டாகும் பயன்கள் ஸ்ரீருத்ர_ஜபத்தில் அடக்கம் என்பது கருத்து.

भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः ।

ध्यानम्—

आपाताल-नभः-स्थलान्त-भुवन-ब्रह्माण्ड-माविस्फुर-
ज्ज्योतिः-स्फाटिक-लिङ्गमौलि-विलसत् पूर्णेन्दुवान्तामृतैः ।
अस्तोकाप्लुत-मेक-मीश-मनिशं रुद्रानुवाकाञ्जपन्
ध्यायेदीप्सित-सिद्धयेऽद्रुतपदं विप्रोऽभिषिञ्चेच्छिवम् ॥ ४ ॥

பூர்ப்புவஸ்ஸுவரோமிதி திக்பந்தஃ ।

த்யானம் ॥

ஆபாதால-நபஃ-ஸ்தலாந்த-புவன-
ப்ரஹ்மாண்ட-மாவிஸ்புரத்
ஜ்யோதிஃ-ஸ்பாடிக-லிங்க-மௌலிவிலஸத்--
பூர்ணேந்து-வாந்தாம்ருதைஃ ।
அஸ்தோகாப்லுத-மேக-மீச-மனிசம்
ருத்ரானுவாகான் ஜபன்
த்யாயே-தீப்ஸித-ஸித்தயேऽத்ருதபதம்
விப்ரோऽபிஷிஞ்சேச் சிவம் ॥ 4 ॥

---

தியானம்—பாதாளம் முதல் ஆகாயம் வரை பரந்துள்ள பிரம்மாண்டமான உலகை விளங்கச் செய்துகொண்டிருக்கும் ஜோதிர்மயமான ஸ்படிக லிங்கத்தின் சிரசில் திகழும் பூர்ண சந்திரனிடமிருந்து பெருகும் அமிருத தாரைகளால் அபிஷேகம் செய்யப்பட்டவராய்க் கருதி விப்ரனவன் விரும்பிய எண்ணம் கைகூடும் பொருட்டு ஏகநாயகனுகிய சிவனைக் குறுகுதலும் நீட்டுதலுமில்லாத நிதானமான உச்சரிப்புடன் இடைவிடாது ருத்திரானுவாகங்களை ஜபம் செய்துகொண்டு தியானம் செய்யவேண்டும். (4)

---

सिद्धये ध्रुवपदं

—பாடபேதம்.

ब्रह्माण्ड-व्याप्तदेहा भसित-हिमरुचा भासमाना भुजङ्गैः
कण्ठे कालाः कपर्दाकलित-शशिकला-श्चण्डकोदण्डहस्ताः ।
त्र्यक्षा रुद्राक्षमालाः प्रणत-भयहराः शांभवा मूर्ति-भेदाः
रुद्राः श्रीरुद्रसूक्त-प्रकटित-विभवा नः प्रयच्छन्तु सौख्यम् ॥

लं-पृथिव्यात्मने गन्धं समर्पयामि । हं आकाशात्मने पुष्पैः पूजयामि । यं वाय्वात्मने धूपमाघ्रापयामि । रं-अग्न्या-

ப்ரஹ்மாண்ட-வ்யாப்ததேஹா பஸிதஹிமருசா
பாஸமாநா புஜங்கைஃ
கண்டே காலாஃ கபர்த்தா-கலித-சசி-கலாச்-
சண்ட-கோதண்ட-ஹஸ்தாஃ ।
த்ர்யக்ஷா ருத்ராக்ஷமாலாஃ ப்ரணதபயஹராஃ
சாம்பவா மூர்த்திபேதாஃ
ருத்ராஃ ஸ்ரீருத்ர-ஸூக்த-ப்ரகடித விபவா
நஃ ப்ரயச்சந்து ஸௌக்யம் ||5||

லம்-ப்ருதிவ்யாத்மனே கந்தம் ஸமர்ப்பயாமி । ஹம்-ஆகாசாத்மனே புஷ்பைஃ பூஜயாமி । யம்-வாய்வாத்மனே

---

பிரம்மாண்டம் முழுவதும் பரவிய சரீரம், விபூதிப் பூச்சால் பனியை யொத்த ஒளி, ஸர்ப்பாபரணங்கள், கறுத்த கழுத்து, பிறைச் சந்திரனைச் சூடிய ஜடாமுடி, உக்கிரமான வில்லேந்திய கைகள், முக்கண்கள், ருத்ராக்ஷ மாலைகள், இவைகளையுடையவர்களாயும், வணங்குபவரின் அச்சத்தைப் போக்குபவர்களாயும், பரமேசுவரரின் ரூபபேதங்களாயும், ஸ்ரீருத்ரஸூக்கத்தினால் வெளிப்படுத்தப்பட்ட மகிமை யுடையவர்களாயும் விளங்கும் ருத்திரர்கள் நமக்கு இன்பப் பேற்றையளிக்கட்டும். (5)

'லம்' என்ற பிருதிவி பீஜத்தால் பிருதிவி வடிவான உமக்கு கந்தம் ஸமர்ப்பிக்கிறேன்.

त्मने दीपं दर्शयामि । वं-अमृतात्मने अमृतं महानैवेद्यं निवेदयामि । सं-सर्वात्मने सर्वोपचारपूजां समर्पयामि ॥ ६ ॥

ओं गणानां त्वा गणपतिं हवामहे कविं कवीना-मुपमश्रवस्तमम् । ज्येष्ठराजं ब्रह्मणां ब्रह्मणस्पत आ नः शृण्वन्नू-तिभि-स्सीद सादनम् ॥ महागणपतये नमः ॥ ७ ॥

தூபமாக்ராபயாமி । ரம்-அக்ன்யாத்மனே தீபம் தர்சயாமி । வம்-அம்ருதாத்மனே அம்ருதம் மஹா-நைவேத்யம் நிவேதயாமி । ஸம்-ஸர்வாத்மனே ஸர்வோபசார-பூஜாம் ஸமர்ப்பயாமி ॥6॥

ஓம் கணானாம் த்வா கணபதி ஹவாமஹே கவிம் கவீனா-முபமச்ரவஸ்தமம் । ஜ்யேஷ்ட-ராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மண ஸ்பத ஆ நஃ ச்ருண்வன்னூதிபிஃ ஸீத ஸாதனம் ॥ மஹாகண பதயே நமஃ ॥7॥

---

'ஹம்' என்ற ஆகாச பீஜத்தால் ஆகாசவடிவான உம்மைப் புஷ்பங்களால் பூஜிக்கின்றேன்.

'யம்' என்ற வாயு பீஜத்தால் வாயுவடிவான உமக்கு தூபம் காட்டுகின்றேன்.

'ரம்' என்ற அக்னி பீஜத்தால் அக்னிவடிவமான உமக்கு தீபம் காட்டுகின்றேன்.

'வம்' என்ற அம்ருத பீஜத்தால் அம்ருதவடிவான உமக்கு அம்ருத மஹா நைவேத்தியத்தைத் தெரிவிக்கின்றேன்.

'ஸம்' என்ற ஸர்வாத்ம பீஜத்தால் ஸர்வாத்மகரான உம்மை எல்லா உபசாரங்களாலும் பூஜிக்கின்றேன். (6)

ஓம். தேவகணங்களுக்குப் பதியாகி, கணபதி என்ற பெயர் பெற்ற உம்மைப் போற்றி யழைக்கிறோம். நீர் மதிமான்களுக்குள் மதி மிக்கவர்; ஒப்பற்ற புகழ்படைத்தவர்; ஒளிபொருந்தியவர்களிற் சிறந்தவர். வேதத்திற்கு

## शान्ति पाठः

शं च मे मयश्च मे प्रियंच मेऽनुकामश्च मे कामश्च मे सौमनसश्च मे भद्रं च मे श्रेयश्च मे वस्यश्च मे यशश्च मे भगश्च मे द्रविणं च मे यन्ता च मे धर्ता च मे क्षेमश्च मे धृतिश्च मे विश्वंच मे महश्च मे संविच्च मे ज्ञात्रं च मे

### சாந்தி பாட:

சஞ்ச மே மயச்ச மே ப்ரியஞ்ச மேऽனு காமச்ச மே
காமச்ச மே ஸௌமனஸச்ச மே பத்ரஞ்ச மே
ச்ரேயச்ச மே வஸ்யச்ச மே யசச்ச மே பகச்ச மே
த்ரவிணஞ்ச மே யந்தாச மே
தர்த்தாச மே க்ஷேமச்ச மே த்ருதிச்ச மே விச்வஞ்ச மே
மஹச்ச மே ஸம்விச்ச மே ஜ்ஞாத்ரஞ்ச மே

---

வேத நாயகராய் விளங்குபவரே! எங்களுடைய பிரார்த்தனைக்குச் செவிசாய்த்து உமது அருள் பொலிவுடன் உமக்குரிய ஆஸனத்தில் இங்கு எழுந்தருள்வீராக! மஹா கணபதியாகிய உமக்கு நமஸ்காரம். (7)

### சாந்தி பாடம்

இவ்வுலக இன்பமும் மேலுலக இன்பமும் பிரியமும் அதனால் ஏற்படும் ஆசையும் அவ்வாசையின் அனுபவமும் நன்மனம் படைத்த உற்றாரும், மங்களமும் உயர் நலமும் நல்ல வாசஸ்தானமும் புகழும் ஸௌபாக்யமும் செல்வமும், வழிகாட்டும் ஆசாரியனும், தந்தை போன்று தாங்குபவனும், உடைமையின் ரக்ஷணமும், தைரியமும், எல்லோருடைய அனுகூலமும், போதனா சக்தியும் மக்களை ஏவுந்திறமையும்

सूश्चं मे प्रसूश्चं मे सीरं च मे लयश्चं म ऋतं चं मे ऽमृतं च मेऽयक्ष्मं च मेऽनामयच्च मे जीवातुश्च मे दीर्घायुत्वं चं मे ऽनमित्रं च मेऽभयं च मे सुगं चं मे शयनं च मे सूषा चं मे सुदिनं च मे ॥

ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

ஸூச்ச மே ப்ரஸூச்ச மே ஸீரஞ்ச மே லயச்ச ம
ருதஞ்ச மேSம்ருதஞ்ச மேSயக்ஷ்மஞ்சமேSநாமயச்ச மே
ஜீவாதுச்ச மே தீர்க்காயுத்வஞ்ச மேSநமித்ரஞ்ச மே
Sபயஞ்ச மே ஸுகஞ்சமே சயனஞ்ச மே
ஸூஷாச மே ஸுதினஞ்ச மே ||
ஓம் சாந்திః சாந்திః சாந்திః ||

---

பணியாட்களை நடத்துந்திறமையும், மேழிச்செல்வமும், இடையூறுகளின் ஒழிவும், யாகம் முதலிய நற்கருமமும், அதன் புண்ணிய பலனும், நீடித்த க்ஷயம் முதலிய நோயின்மையும், குறுகிய ஜ்வரம் முதலிய நோயின்மையும், நோயற்ற வாழ்விற்குரிய மருந்தும், நீண்ட ஆயுளும், சிநேகிதரல்லாதாரில்லாமையும், பயமின்மையும், நன்னடக்கையும், நல்ல சயனமும், பகவத்ஸ்மரணையுடன் கூடிய விடியற்காலையும் யக்ஞம் தானம் அத்தியயனம் முதலிய பாவனமான காரியங்களுடன் கூடிய பகற்பொழுதும், ஸ்ரீருத்திரனை ஆராதிக்கும் எனக்குச் சித்திப்பனவாம். (பதவுரை சமகம் அனுவாகம் மூன்றில் பார்க்க.)

---

ஒ. 'அச்சம் இலர் பாவம் இலர் கேடும் இலர் அடியார்'.
1-18-2. சம்பந்தர் தேவாரம்.

## ॥ श्रीरुद्रप्रश्नः ॥

(नमकम्)

ओं नमो भगवते रुद्राय ॥

नमस्ते रुद्रमन्यवं उतोत इषवे नमः ।
नमस्ते अस्तु धन्वने बाहुभ्यां-मुत ते नमः ॥ १. १. ॥

## ஸ்ரீ ருத்ரப்ரச்ன:

॥ ஓம் நமோ பகவதே ருத்ராய ॥

நமஸ்தே ருத்ர-மன்யவ உதோத இஷவே நமஃ ।
நமஸ்தே அஸ்து தன்வனே பாஹுப்யா-முத தே நமஃ॥ 1 1. ॥

---

## ஸ்ரீ ருத்ரப்ரச்னம்

(நமகம்)

1. 1. ஓம். (பகவதே) பகவானுகிய (ருத்ராய) ருத்ரருக்கு (நமஃ) நமஸ்காரம்.

(ருத்ர) ருத்திரரே ! (தே) உம்முடைய (மன்யவே) கோபத்திற்கு (நமஃ) நமஸ்காரம். (உத) மேலும் (தே) உம்முடைய (இஷவே) பாணத்திற்கு (நமஃ) நமஸ்காரம். (தே) உம்முடைய (தன்வனே) வில்லிற்கு (நமஃ அஸ்து) நமஸ்காரம் இருக்கட்டும். (உத) மேலும் (தே) உம்முடைய (பாஹுப்யாம்) இரு கைகளுக்கும் (நமஃ) நமஸ்காரம்.

---

1. 1. (ருதம் த்ராவயதீதி ருத்ரஃ) துக்கத்திற்குக் காரணமான பாவத்தை விரட்டுவதால் ருத்ரன் எனப் பெயர்.

**यात॒ इषुः॑ शि॒वत॑मा शि॒वं ब॒भूव॑ ते॒ धनुः॑ ।**
**शि॒वा श॑र॒व्या॑ या तव॒ तया॑ नो रुद्र मृडय ॥ १. २. ॥**

யாத இஷு: சிவதமா சிவம் பபூவ தே தனு: ।
சிவா சரவ்யா யா தவ தயா நோ ருத்ர ம்ருடய ॥ 1. 2 ॥

---

1. 2. (ருத்ர) ருத்திரரே ! (தே) உம்முடைய (யா) எந்த (இஷு:) பாணம் (சிவதமா) சிறந்த மங்களமுடையதாக (பபூவ) உளதோ, (தே) உம்முடைய (தனு:) எந்த வில் (சிவம்) மங்களமுடையதாக (பபூவ) உளதோ, (தவ) உம்முடைய (யா) எந்த (சரவ்யா) அம்பருத்தூணி (சிவா) மங்களமுடையதாக உளதோ (தயா) அவற்ருல் (ந:) எங்களை (ம்ருடய) இன்புறச் செய்யும்.

---

முதல் மந்திரத்திற்கு ரிஷி ஆத்ரேயர், சந்தஸ் அனுஷ்டுப், தேவதை ஸ்ரீருத்ரன்.

த்யானம் :— ஆகர்ண-க்ருஷ்டே தனுஷி ஜ்வலந்தீம்
தேவீமிஷும் பாஸ்வதி ஸந்ததானம் ।
த்யாயேன்-மஹேசம் மஹனீய-வேஷம்
தேவ்யா யுதம் யோத-தனும்-யுவானம் ॥

ருத்ரகல்பார்ணவம் முதலிய நூல்களில் மந்திரங்களை ஜபிக்கும் முறையையும் பிரயோகங்களையும் காணலாம்.

இதில் ஒவ்வொரு மந்திரத்திற்கும் தனித்தனி ரிஷி சந்தஸ் தேவதையும் தியான சுலோகமும் உண்டு.

1. 2. (பக்தேஷு ப்ரவ்ருத்யபாவாத் தேஷாம் சாந்தத்வம்)

பக்தர்களிடம் ருத்ரருடைய ஆயுதங்கள் இம்சிக்கச் செல்லுவதில்லை. சாந்தமாகவே இருக்கின்றன.

பரமேசுவரனுடைய வில்லும் பாணமும் தேவதைகளைப் போல் உபாசிக்கத்தக்கவை.

'யாம்-ராம்-லாம்-வாம்-ஸாம்-த்ராம்-த்ரீம்-க்லீம்-ப்லூம்-ஸ:-ஸர்வஜம்பனேப்யோ காமேச்வரீ - காமேச்வர - பாணேப்யோ நம: ।
பாணசக்தி-ஸ்ரீபாதுகாம் பூஜயாமி' என்பது ஸ்ரீவித்யா பூஜா மந்திரம்.

ஒரு சமயம் பாசுபதாஸ்திரப் பிரயோகத்தை அர்ஜுனனுக்குக் கற்பிக்கும் பொருட்டு ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனைக் கைலாஸம் அழைத்துச் சென்ருர். பரமசிவன் " ஒரு திவ்ய ஸரஸ்ஸில் அந்த

या ते रुद्र शिवा तनू-रघोराऽपापकाशिनी ।
तया नस्तनुवा शन्तमया गिरिशंताभिचाकशीहि ॥१.३.॥

யாதே ருத்ர சிவா தனூ-ரகோராSபாப காசினீ ।
தயா நஸ்-தனுவா சந்தமயா கிரிசந்தாபிசாகசீஹி ॥ 1. 3 ॥

1. 3. (ருத்ர) ருத்திரரே ! (கிரிசந்த) கயிலேயங்கிரியிலிருந்துகொண்டு உலகிற்கு இன்பத்தை ஊட்டுபவரே ! உம்முடைய (அகோரா) சாந்தமானதும் (சிவா) மங்களமானதும் (அபாபகாசினீ) பாவம் நீங்கிய மோக்ஷநிலேயைப் பிரகாசப் படுத்துவதுமான (யா) எந்த (தனுঃ) வடிவம் உள்ளதோ (தயா) அந்த (சந்தமயா) உயர்நலமளிக்கும் (தனுவா) வடிவால் (நঃ) எங்களுக்கு (அபிசாகசீஹி) எங்கும் ஆத்மதத்துவம் விளங்கும்படி அருள்வீராக.

அஸ்திரம் இருக்கிறது. அதை எடுத்துவாருங்கள்" என்றார். அவர்கள் அங்கு சென்று பார்க்கையில் பல ஸர்ப்பங்களின் வாய்களிலிருந்து வெளிவரும் கொடிய விஷஜ்வாலேயுடன் மிகபயங்கரமாக அவ்வஸ்திரம் தோற்றமளித்தது. ஸ்ரீ ருத்ர ஜபம் செய்யவே அது மிக சாந்தமான உருவத்துடன் கிருஷ்ணனிடம் வந்தது.

ம. பா.

இரண்டாவது மந்திரத்திற்கு ரிஷி ஆத்ரேயர், சந்தஸ் அனுஷ்டுப், தேவதை சம்பு.

த்யானம் :— த்யாயேத் தேவம் ஸஸ்மிதம் ஸ்யந்தனஸ்த்தம்
தேவ்யா ஸார்த்தம் தேஜஸா தீப்ய-மானம் ।
இஷ்விஷ்வாஸாலங்க்ருதாப்யாம் புஜாப்யாம்
சூராகாரம் ஸ்தூயமானம் ஸுரௌகைঃ ॥

இந்த மந்திரத்தைப் பன்னிரண்டு நாட்கள் நித்தியகர்மாக்களுக்கு விரோதமில்லாமல் நடுநிசியைத் தவிர மற்ற காலங்களில் இடைவிடாமல் ஜபித்து வந்தால் சித்தி ஏற்படும் என்றும் இது பஞ்சம், எதிரிகளின் பீடை முதலியவற்றைப் பரிஹாரம் செய்யும் என்றும் மந்திர சாஸ்திரம் கூறுகிறது.

1. 3. 'கிரிசந்த' எனும் பதத்தில் கிரி என்பது கயிலாயகிரியையும் வேதத்தின் உச்சியையும், பிரணவத்தையும் குறிக்கும்.

**यामिषुं गिरिशंत हस्ते बिभर्ष्यस्तवे ।**
**शिवां गिरित्र तां कुरु मा हिꣳसीः पुरुषं जगत् ॥ १.४. ॥**

யாமிஷு‌ம் கிரிசந்த ஹஸ்தே பிபர்ஷ்யஸ்தவே ।
சிவாங் கிரித்ர தாம் குரு மா ஹிꣳஸீः புருஷஞ் ஜகத் ॥
॥ 1.4. ॥

---

1. 4. (கிரிசந்த) கயிலையங்கிரியிலிருந்து கொண்டு உலகிற்கு இன்பத்தை ஊட்டுப்வரே ! (கிரித்ர) கயிலையங்கிரியிலிருந்துகொண்டு சரணமடைந்தோரை இரக்ஷிப்பவரே ! (அஸ்தவே) பாவிகள் மேல் பிரயோகிப்பதற்காக (ஹஸ்தே) கையில் (யாம் இஷு‌ம்) எந்த பாணத்தை (பிபர்ஷி) தரிக்கிறீரோ (தாம்) அதை (சிவாம்) சாந்தமாக (குரு) செய்யும், (புருஷம்) மக்களையும் (ஜகத்) உலகத்தையும் (மா ஹிம்ஸீः) துன்புறுத்தவேண்டாம்.

---

இம்மூன்று ஸ்தானங்களிலும் இருந்துகொண்டு, உபாசிப்பவர்க்கு ஒப்புயர்வற்ற நன்மையைச் செய்பவர் பரமசிவன்.

இம்மந்திரத்திற்கு ரிஷி காச்யபர், சந்தஸ் ஸ்வராடனுஷ்டுப், தேவதை சம்பு.

த்யானம் :— ஸ்மேரானனம் சந்த்ர-கலாவதம்ஸம்
கங்காதரம் சைலஸு‌தா-ஸஹாயம் |
த்ரிலோசனம் பஸ்ம-புஜங்க-பூஷணம்
த்யாயேத் பசூனாம் பதி-மீப்ஸிதாரம் ||

பசுக்களின் சாந்தியின் பொருட்டு இம்மந்திரத்தின் ஜபமும் ஹோமமும் விதிக்கப்படுகிறது.

1. 4-5. நான்காவதும் ஐந்தாவதும் இரண்டும் சேர்ந்து ஒரே மந்திரம். ரிஷி கௌதமர், சந்தஸ் காயத்ரீ, தேவதை ருத்ரன்.

த்யானம் :—ஸாங்க்ராமிகேன வபுஷா ப்ரவிராஜமானம்
தேவம் புரத்ரய—விநாசன-மந்தஹாஸம் |
தைத்யான் திதக்ஷு‌-மசலேச்வர-சாபபாணிம்
த்யாயேத் புராரி-மத பூமி-ரதாதிரூடம் ||

அகால மரணம் முதலியவை இம்மந்திரத்தால் விலகும் என்று கூறப்பட்டுள்ளது.

शिवेन वचसा त्वा गिरिशाच्छा वदामसि ।
यथा नः सर्वमिज्जगदयक्ष्मꣳसुमना असत् ॥ १.५. ॥
अध्यवोचदधि वक्ता प्रथमो दैव्यो भिषक् ।
अहीꣳश्च सर्वाञ्जम्भयन्त्सर्वाश्च यातुधान्यः ॥ १. ६. ॥

சிவேன வசஸா த்வா கிரிசாச்சா வதாமஸி ।
யதா நः ஸர்வமிஜ்ஜகதயக்ஷ்ம ꣳ ஸுமனா அஸத் ॥ 1. 5 ॥
அத்யவோசததி வக்தா ப்ரதமோ தைவ்யோ பிஷக் ।
அஹீ ꣳ ச்ச ஸர்வான் ஜம்பயன்த்ஸர்வாச்ச யாதுதான்ய: ॥
1. 6 ॥

1. 5. (கிரிச) கயிலையில் உறைபவரே! (த்வா) உம்மை (அச்சா) அடைவதற்கு (சிவேன) மங்களகரமான (வசஸா) ஸ்துதிவசனங்களால் (வதாமஸி) போற்றுகிறோம். (ந:) எங்களுடைய (ஜகத் இத்) உறவினரும், ஆவினம் முதலியவைகளும் (ஸர்வம்) எல்லாம் (அயக்ஷ்மம்) நோயற்றவையாகவும் (ஸுமனா:) பரஸ்பரம் நேசம் மிக்கவையாகவும் (யதா) எவ்வாற்றால் (அஸத்) விளங்குமோ—அவ்வாறு அருள் புரிதல் வேண்டும்.

1. 6. (ப்ரதம:) அனைத்துலகிற்கும் முதலாகியவரும் (தைவ்ய:) தேவர்களின் தெய்வத்தன்மையாயிருப்பவரும் (பிஷக்) பிறவிப் பிணிக்கு வைத்தியரும் (அதிவக்தா) பக்தர்களின் குற்றத்தை மறந்து குணத்தைக் கொண்டாடுகிறவரும் ஆகிய பரமேசுவரன் (ஸர்வான்) எல்லா (அஹீம்ச்ச) பாம்பு முதலிய துஷ்ட ஜந்துக்களையும் (ஸர்வாச்ச) எல்லா (யாதுதான்ய:) அரக்கர்களையும் (ஜம்பயன் அழித்து) (அத்யவோசத்) எங்களுக்காகப் பரிந்து பேசட்டும்.

1. 6. பிஷக் ;—(ஏதஸ்ய த்யான-மாத்ரேண ஸர்வரோக-உபசமனாத் அயம் சிகித்ஸக:) இவரை தியானித்த அளவில் எல்லா நோய்களும் தீருவதால் இவர் வைத்தியர்.

ஒ. பிஷக்தமம் த்வா பிஷஜாம் ச்ருணோமி ॥ சுருதி.

असौ यस्ताम्रो अरुण उत बभ्रुः सुमङ्गलः ।
ये चेमाꣳरुद्रा अभितो दिक्षु ।
श्रिताः सहस्रशोऽवैषाꣳहेड ईमहे ॥ १. ७. ॥

அஸௌ யஸ்தாம்ரோ அருண உத பப்ருஃ ஸுமங்கலஃ ।
யே சேமாꣳருத்ரா அபிதோ திக்ஷு ।
ச்ரிதாஃ ஸஹஸ்ரசோऽவைஷாꣳஹேட ஈமஹே ॥1. 7. ॥

---

1. 7. (தாம்ரஃ) தாமிரம் போல் சிவந்தும் (உத அருணஃ) இன்னும் கூடச் சற்றுச் சிவந்தும் (பப்ருஃ) பொன்னிறமாயும் (ஸுமங்கலஃ) சிறந்த மங்களஸ்வரூபியாயும் (யஃ) எந்த சூரியன் விளங்குகிருரோ அவர் (அஸௌ) இந்த ருத்திரனே (இமாம்) இந்த பூமியை (அபிதஃதிக்ஷு) எல்லா திக்கிலும் வியாபித்திருக்கும் (ருத்ராஃ) ருத்திர மூர்த்திகள் (ச) மேலும் (யே) எவர்கள் (ஸஹஸ்ரசஃ) ஆயிரக்கணக்காக (ச்ரிதா:) இருக்கின்ருர்களோ (ஏஷாம்) இவர்கள் எல்லோருடைய (ஹேடஃ)கோபமும் (அவ ஈமஹே) தணிந்து போகும்படி வழிபடுகின்ருேம்.

---

'வாளாலறுத்துச் சுடினும் மருத்துவன் பால் மாளாத காதல் நோயாளன் போல்' பரமசிவன் தண்டித்தாலும் அவரை வாழ்த்துவதே ஞானிக்கு அழகு.

அதிவக்நா—மார்க்கண்டேயனுக்கு ஆயுள் முடிந்த போதும் அவனுக்காகப் பரிந்து யமனணுகாமல் செய்தவர் பரமசிவன். ஒரு பில்வ மரத்தில் ஏறிய வேடன் பில்வ தளங்களைப் பறித்துப்போட அதைப் பூஜையாகக் கொண்ட பரமசிவன் அவ்வேடனுக்குப் பரிந்து பேசி யமதூதர்களிடமிருந்து காப்பாற்றியவர் என்றும் சிவபுராணம் கூறுகிறது.

ஆருவது மந்திரத்தின் ரிஷி கண்வர், சந்தஸ் அனுஷ்டுப், தேவதை சம்பு.

**த்யானம் :—**

சந்த்ரார்த்தமௌலிம் காலாரிம் வ்யால-யஜ்ஞோபவீதினம் ।
ஜ்வலத்-பாவக-ஸங்காசம் த்யாயேத் தேவம் த்ரிலோசனம் ॥

असौ योऽवसर्पति नीलग्रीवो विलोहितः ।
उतैनं गोपा अदृशन्नदृशन्नुदहार्यः ।
उतैनं विश्वा भूतानि स दृष्टो मृडयाति नः ॥ १. ८. ॥

அஸௌ யோऽவஸர்ப்பதி நீலக்ரீவோ விலோஹிதஃ ।
உதைனம் கோபா அத்ருசன்-னத்ருசன்னுதஹார்யஃ ।
உதைனம் விச்வா பூதானி ஸத்ருஷ்டோ ம்ருடயாதி நஃ ||1.8||

1, 8. (யஃ) எவர் (நீலக்ரீவஃ) கரிய கழுத்தை யுடையவரோ அவரே (விலோஹிதஃ) சிவந்த வர்ணமுடையவராகிய (அஸௌ) இந்த சூரியனுக (அவஸர்ப்பதி) வெளிக்கிளம்புகிருர். (ஏனம்) சூரிய ரூபியாகிய இந்த ருத்திரனை (கோபாஃ உத) இடையர்களுங்கூட (அத்ருசன்) பார்க்கின்றனர். (உதஹார்யஃ) தண்ணீர்கொண்டுவரும் பெண்களும் (அத்ருசன்) பார்க்கின்றனர். (ஏனம்) இந்த ருத்திரனை (விச்வா பூதானி உத) மற்றும் எல்லாப் பிராணிகளுங் கூடப் பார்க்கின்றன. (த்ருஷ்டஃ) அங்ஙனம் தரிசிக்கப்பெற்ற (ஸஃ) ஆதித்தியரூபியாகிய அவர் (நஃ) நம்மை (ம்ருடயாதி) இன்புறச் செய்யட்டும்.

இது ராக்ஷஸர்கள், பிசாசுகள், விஷஜ்வரம் முதலிய பீடைகளைப் போக்கும்.

**1. 7.** ஹேட ஈமஹே—க்ரோத-ஸத்ருசம் தீக்ஷ்ணத்வமவேமஹே, பக்தி-நமஸ்காராதிஞ நிவாரயாமஃ ।

**1. 8.** கோபா :—(வேத-சாஸ்த்ர - ஸம்ஸ்கார - ரஹிதா கோபாலாஃ । ஸர்வேஷாம் தர்சனார்த்த-மேவ ஹி ருத்ரஸ்யாதித்ய-மூர்த்தி-தாரணம்) வேத சாஸ்திர ஸம்ஸ்காரமில்லாத இடையர்களுட்பட எல்லோருக்கும் காட்சியளிப்பதற்காகவே ருத்திரன் சூரியவடிவு கொண்டு உதிக்கிருர்.

ஏழாவது எட்டாவது மந்திரங்களுக்கு ரிஷி மருத்வான், சந்தஸ் ஆஸ்தாரபங்க்தியும் ஜகதீயும், தேவதை ஆதித்ய ரூபியான பரமேசுவரன்.

नमो अस्तु नीलग्रीवाय सहस्राक्षाय मीढुषे ।
अथो ये अस्य सत्त्वानोऽहं तेभ्योऽकरन्नमः ॥ १. ९. ॥

நமோ அஸ்து நீலக்ரீவாய ஸஹஸ்ராக்ஷாய மீடுஷே।
அதோ யே அஸ்ய ஸத்வானோऽஹம் தேப்யோऽகரந் நம:
॥1. 9॥

---

1. 9. (நீலக்ரீவாய) கரிய கண்டம் படைத்தவரும் (ஸஹஸ்ராக்ஷாய)—காண்பதெல்லாம் அவர் கண்ணுகையால்—கணக்கற்ற கண்கள் படைத்தவரும் (மீடுஷே) வேண்டுவார் வேண்டியவற்றை அளிப்பவருமான பரமேசுவரனுக்கு (நம:) நமஸ்காரம் (அஸ்து) உரித்தாகட்டும். (அத:) மேலும் (அஸ்ய) இவருடைய (ஸத்வான:) அடியார்களாகிய பிரமதகணங்கள் (யே) எவர்களோ (தேப்ய:) அவர்களுக்கும் (அஹம்) நான் (நம:) நமஸ்காரத்தை (அகரம்) செய்கின்றேன்.

..................................

த்யானம்:—மண்டலாந்தரகதம்-ஹிரண்மயம்
ப்ராஜமான-வபுஷம் சுசிஸ்மிதம் ।
சண்டதீதி-மகண்டித-த்யுதிம்
சிந்தயேன்-முனிஸஹஸ்ர-ஸேவிதம் ॥

இந்த மந்திர ஜபத்தால் மழை உண்டாகும் என்று கூறப்பட்டுள்ளது.

1. 9. நீலக்ரீவாய—ஒ. மிக்காரமுதுண்ண நஞ்சுண்ட மேலவன்.

—திருமந்திரம்.

ஒ. நாலம் வா பரமோபகாரக-மிதந்-த்வேகம் பசூனும்பதே
பச்யன் குக்ஷிகதான் சராசரகணுன் பாஹ்யஸ்த்திதான் ரக்ஷிதும் ।
ஸர்வாமர்த்ய-பலாயனௌஷத-மதிஜ்வாலாகரம் பீகரம்
நிக்ஷிப்தம் கரளம் களே ந கிளிதம் நோத்கீர்ணமேவ த்வயா ॥
—சிவானந்தலஹரீ. 31

மீடுஷே—'மீட்வான் ஸேசக: வ்ருஷ்டிகர்த்தா' ।
மழைபொழிந்து பயிர்களைக் கருத்தரிக்கச் செய்பவர் அல்லது

प्रमुंच धन्वनस्त्व-मुभयो-रार्त्नियो-र्ज्याम् ।
याश्च ते हस्त इषवः परा ता भगवो वप ॥ १. १०. ॥

ப்ரமுஞ்ச தன்வனஸ்த்வ-முபயோர்-ரார்த்னியோர்-ஜ்யாம் ।
யாச்ச தே ஹஸ்த இஷவஃ பரா தா பகவோ வப ॥1. 10 ॥

---

1. 10. (த்வம்) நீங்கள் (தன்வனஃ) வில்லினுடைய (உபயோஃ) இரண்டு (ஆர்த்னியோஃ) நுனிகளிலும்—பூட்டப் பட்டுள்ள—(ஜ்யாம்) நாண் கயிற்றை (ப்ரமுஞ்ச) அவிழ்த்து விடுங்கள். (பகவஃ) பகவானே ! (தே) உம்முடைய (ஹஸ்தே) கையில் உள்ள (இஷவசச) பாணங்களும் (யாஃ) எவையோ (தாஃ) அவற்றையும் (பரா வப) அம்பறுத் தூணியில் மறைத்துவிடும்.

---

புருஷரூபமாக இருந்து வீர்யத்தை அளித்துக் கர்ப்பத்தை உண்டாக்குகிறவர் எனவும் கொள்ளலாம்.

ஓ. என்னுடைய க்ஷேத்திரம் பெரிதும் எல்லாவற்றையும் தன்னுள் தாங்குவதுமான மூலப்பிரகிருதி. அதில் நான் கர்ப்பத்தை வைக்கிறேன். அதினின்று எல்லா உயிர்களின் உற்பத்தியும் உண்டாகிறது. கீ. 14. 3,

ஒன்பதாவது மந்திரத்தின் ரிஷி சம்பு, சந்தஸ் அனுஷ்டுப், தேவதை சம்பு.

த்யானம்—சரச்சந்த்ரப்ரகாசேன வபுஷா சீதல-த்யுதிம் ।
த்யாயேத் ஸிஹ்மாஸனாஸீன-முமயா ஸஹிதம் சிவம் ॥

இம்மந்திரஜபத்தால் ஸத்புத்திர லாபம் ஏற்படும் எனக் கூறப் பட்டுள்ளது.

**1. 10.** பராவப—பரித்யஜ.

अवतत्य धनुस्त्वꣳ सहस्राक्ष शतेषुधे ।
निशीर्य शल्यानां मुखा शिवो नः सुमना भव ॥ १.११ ॥
विज्यं धनुः कपर्दिनो विशल्यो बाणवाꣳ उत ।
अनेशन्नस्येषव आभुरस्य निषंगथिः ॥ १.१२ ॥

அவதத்ய தனுஸ்த்வꣳ ஸஹஸ்ராக்ஷ சதேஷுதே ।
நிசீர்ய சல்யானும் முகா சிவோ நஃ ஸுமனா பவ ॥ 1.11 ॥

விஜ்யம் தனுஃ கபர்திநோ விசல்யோ பாணவாꣳ உத ।
அநேசந்நஸ்யேஷவ ஆபுரஸ்ய நிஷங்கதிஃ ॥ ॥ 1. 12 ॥

---

1. 11. (ஸஹஸ்ராக்ஷ) கணக்கற்ற கண்களையுடையவரே! (சதேஷுதே) பல அம்பறுத்தூணிகளையுடையவரே! (த்வம்) நீங்கள் (தனுஃ) வில்லை (அவதத்ய) நாணைத் தளர்த்தி விட்டு (சல்யானும்) அம்புகளுடைய (முகா) நுனிகளை (நிசீர்ய) மழுங்கச் செய்து (நஃ) எங்களுக்கு (சிவஃ) மங்களவடிவினராயும் (ஸுமனாஃ) நல்ல மனதுடையவராகவும் (பவ) ஆகவேண்டும்.

1. 12. (கபர்த்தினஃ) சடைதரித்த பரமேசுவரனுடைய (தனுஃ) வில் (விஜ்யம்) நாணற்றதாக ஆகட்டும். (பாணவான் உத) அம்பறுத்தூணியும் (விசல்யஃ) பாணமற்றதாகட்டும். (அஸ்ய) இவருடைய (இஷவஃ) அம்புகள் (அநேசன்) துன்புறுத்தும் சக்தியை இழந்து விடட்டும். (அஸ்ய) இவருடைய (நிஷங்கதிஃ) கத்தியின் உறை (ஆபுஃ) விலகாமலிருக்கட்டும்.

---

1. 12. அநேசன்—வேத்து-மஸமர்த்தா பவந்து.

**या ते हेति-र्मीढुष्टम हस्ते बभूव ते धनुः ।**
**तयाऽस्मान्विश्वतस्त्व-मयक्ष्मया परिब्भुज ॥ १. १३ ॥**

யாதே ஹேதிர்-மீடுஷ்டம ஹஸ்தே பபூவதே தனுஃ ।
தயாஸ்மான்-விச்வதஸ்த்வ-மயக்ஷ்மயா பரிப்புஜ ॥ 1. 13 ॥

1. 13. (மீடுஷ்டம) பக்தர்களின் இஷ்டத்தை அளிப் போரிற் சிறந்தவரே! (தே) உம்முடைய (ஹேதிஃ) ஆயுதங்கள் (யா) எவையோ (தே) உம்முடைய (ஹஸ்தே) கையில் (தனுஃ) வில் (பபூவ) எது உளதோ (அயக்ஷ்மயா) நோய் செய்யாத (தயா) அவற்ருல் (த்வம்)நீங்கள் (அஸ்மான்) எங்களை (விச்வதஃ) எல்லாத்தீமைகளினின்றும் (பரிப்புஜ) எப்பொழுதும் எங்கும் காப்பாற்றும்.

1. 13. மீடுஷ்டம—அதிசயேன காமாபிவர்ஷக.

அயக்ஷ்மயா—அனுபத்ரவகாரிண்யா.

பத்தாவது பதினொன்ருவது பன்னிரண்டாவது ஆகிய மூன்று மந்திரங்களுக்கும் ரிஷி நாரதர், சந்தஸ் அனுஷ்டுப், தேவதை ருத்ரன்.

த்யானம் :—உத்யத்-பாஸ்கர-கோடி-ப்ரகாசம்
ஆதீப்த-தஹன-மூர்த்தானம் ।
பீஷண-புஜங்க-பூஷம்
த்யாயேத்-விவிதாயுதம் ருத்ரம் ॥

இதன் ஜபத்திற்குச் சத்துரு நாசம் பயனுகக் கூறப்பட்டுள்ளது.

சத்துரு யார்?—'இது காமம், இதுகோபம், ரஜோகுணத்தில் உதித்தது, பெருந்தீனி வேண்டுவது, கொடிய பாவத்தை விளைவிப்பது; இவ்வுலகில் இதையே சத்துருவாக அறிவாய்.'

—கீதை 3. 37

नमस्ते अस्त्वायुधायानाततायधृष्णवे ।
उभाभ्यामुत ते नमो बाहुभ्यां तव धन्वने ॥ १.१४ ॥
परि ते धन्वनो हेति-रस्मान्वृणक्तु विश्वतः ।
अथो य इषुधिस्तवारे अस्मन्निधेहि तम् ॥ १. १५ ॥

நமஸ்தே அஸ்த்வாயுதாயானாததாய த்ருஷ்ணவே ।
உபாப்யாமுத தே நமோ பாஹுப்யாம் தவ தன்வனே ॥1.14
பரி தே தன்வனோ ஹேதி-ரஸ்மான் வ்ருணக்து விச்வதः ।
அதோ ய இஷுதிஸ்தவாரே அஸ்மந்நிதேஹி தம் ॥1.15॥

---

1.14. (த்ருஷ்ணவே) திடமானதும் (அனாததாய) ஆனால் அடிக்கச்சித்தமாயில்லாததுமான (தே) உம்முடைய (ஆயுதாய) ஆயுதத்திற்கு (நமः) நமஸ்காரம் (அஸ்து) உரித்தாகட்டும். (உத) மேலும் (தே) உம்முடைய (உபாப்யாம்) இரண்டு (பாஹுப்யாம்) கைகளுக்கும், (தவ) உம்முடைய (தன்வனே) வில்லிற்கும் (நமः) நமஸ்காரம்.

1. 15. (தே) உம்முடைய (தன்வனः) வில்லின் (ஹேதிः) அம்பாகிய ஆயுதம் (அஸ்மான்) எங்களை (விச்வதः) எப்புறத்திலும் (பரிவ்ருணக்து) துன்புறுத்தாமல் விலகிச் செல்லட்டும். (அதோ) மேலும் (தவ) உம்முடைய (இஷுதிः) அம்பறுத்தூணி (யः) எதுவோ (தம்) அதை (அஸ்மத்) எங்களுடைய (ஆரே) பாவ வடிவாகிய பகைக் கூட்டத்திற்காக (நிதேஹி) வைத்து விடுங்கள்.

---

1. 14. த்ருஷ்ணவே-ஸ்வரூபேண ப்ரஹர்த்தும் ப்ரகல்பாய.

1. 15. ஆரே—அஸ்மத்தோ தூரே.—எங்களிடமிருந்து தூரத்தில் என்றும் பொருள் கொள்ளலாம்

பதின்மூன்றுவது பதினான்காவது பதினைந்தாவது ஆகிய மூன்று மந்திரங்களுக்கும் ரிஷி பரமேச்வரன், சந்தஸ் அனுஷ்டுப், தேவதையும் பரமேச்வரன்.

नमस्ते अस्तु भगवन् विश्वेश्वराय महादेवाय त्र्यंबकाय त्रिपुरान्तकाय त्रिकाग्नि-कालाय कालग्निरुद्राय नीलकण्ठाय मृत्युंजयाय सर्वेश्वराय सदाशिवाय श्रीमन्महादेवाय नमः॥२.०

நமஸ்தே அஸ்து பகவன் விச்வேச்வராய மஹாதேவாய த்ர்யம்பகாய த்ரிபுராந்தகாய த்ரிகாக்னி-காலாய காலாக்னி-ருத்ராய நீலகண்டாய ம்ருத்யுஞ்ஜயாய ஸர்வேச்வராய ஸதாசிவாய ஸ்ரீமன் மஹாதேவாய நம ঃ ||2.0||

2.0. (பகவன்) பகவானே, (விச்வேச்வராய) உலக நாயகனும் (மஹாதேவாய) தேவர்களிற் சிறந்தவனும் (த்ர்யம்பகாய) முக்கண்படைத்தவனும் (த்ரிபுராந்தகாய) முப்புரங்களை யெரித்தவனும் (த்ரிகாக்னிகாலாய) முச்சுடர்களையும் உபஸம்ஹரிப்பவனும் (காலாக்னி ருத்ராய) காலாக்கினிருத்திரனும் (நீலகண்டாய) கண்டம் கருத்தவனும் (ம்ருத்யுஞ்ஜயாய) யமனைஜயித்தவனும் (ஸர்வேச்வராய) அனைத்திற்கும் ஈசுவரனும் (ஸதாசிவாய) ஸதாசிவனும் (ஸ்ரீமன்மஹாதேவாய) சீர் பொருந்திய மகாதேவனும் ஆகிய (தே) உமக்கு (நமঃ) நமஸ்காரம் (அஸ்து) உரித்தாகட்டும்.

---

த்யானம்—

ப்ரணம-தமரஸங்க - மௌலிமாலா-குஸும - ரஜோருண-பாத-பத்ம யுக்மம் |

அனவரத-மனுஸ்மரேத் பவான்யா ஸஹ ஜகதாம் பிதரம் பிநாகபாணிம் ||

இதன் ஜபத்திற்கும் சத்துரு நாசமே பயனாகக் கூறப்பட்டுள்ளது.

2.1. ப்ரதமானுவாகே பகவதோ ருத்ரஸ்ய யா ப்ரதான-பூதா தனுஸ்-தாம் பஹுதா ப்ரஸாத்ய தஸ்ய யே லீலா-விக்ரஹா ஜகந்நிர்வாஹ-ஹேதவஸ்-தேऽஷ்டமிரனுவாகை ঃ ப்ரஸாத்யந்தே | தேஷ்வனுவாகேஷு ஸர்வாண்யபி யஜூஷி | தானி ச த்வி-விதானி உபயதோ நமஸ்கராண்யன்யதரதோ நமஸ்காராணி ச | தத்ர

नमो हिरण्यबाहवे सेनान्ये दिशां च पतये नमो नमो

நமோ ஹிரண்ய-பாஹவே ஸேனான்யே திசாஞ்சபதயே
நமோ நமோ

---

2.1. (1) (ஹிரண்ய-பாஹவே) பொன்னிறமான தோள்களையுடையவராகவும் (ஸேனான்யே) சேனாபதியாகவும் (திசாஞ்ச பதயே) திசைகளுக்குப் பதியாகவும் இருக்கும் பரமேசுவரனுக்கு (நமோ நமঃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

---

த்ரிஷ்வனுவாகேஷு நமஸ்காராதிகம் நமஸ்காராந்த-மேகைகம் யஜுঃ |இதரேஷு பஞ்சஸ்வனுவாகேஷு நமஸ்காராதிக-மேகைகம் யஜுঃ |

முதல் அனுவாகத்தில் பகவான் ருத்ரருடைய பிரதான ரூபம் போற்றப்பட்டபின் இனி உலகை நிர்வகிக்கக் காரணமான அவருடைய லீலை வடிவுகள் எட்டு அனுவாகங்களால் போற்றப் படுகின்றன. அவ்வனுவாகங்களில் உள்ளவை எல்லாம் யஜுர் மந்திரங்கள். அவை இருவகை; முன்னும் பின்னும் 'நமঃ' என்னும் பதமுடையனவும், வேறுவகையானவையும். முதல் மூன்று அனுவாகங்களில் உள்ள ஒவ்வொரு யஜுர் மந்திரமும் முன்னும் பின்னும் நமঃ எனும் பதத்தால் ஸம்புடிதமானது. மற்ற ஐந்து அனுவாகங்களில் உள்ள ஒவ்வொரு யஜுர் மந்திரமும் ஆதியில் மட்டும் நமঃ என்னும் பதத்தைக்கொண்டது. —ஸா.

'நமঃ' என்று சொல்லி பகவானை வணங்குதல் முமுக்ஷுவுக்குத் தலைசிறந்த ஸாதனம். பகவானை 'நமঃ' என்று வணங்க வணங்க இவனை ஆசைகளெல்லாம் வந்து வணங்கி ஏவல் செய்யும். 'தம் நம இதி உபாஸீத| நம்யந்தேऽஸ்மை காமா:' என்று தைத்திரீயோபநிஷதம் கூறுகிறது.

**वृक्षेभ्यो हरिकेशेभ्यः पशूनां पतये नमो नमः**
**सस्पिञ्जराय त्विषीमते पथीनां पतये नमो नमो**
**बभ्लुशाय विव्याधिनेऽन्नानां पतये नमो नमो**

வ்ருக்ஷேப்யோ ஹரிகேசேப்யஃ பசூனாம் பதயே நமோ நமஃ
ஸஸ்பிஞ்ஜராய த்விஷீமதே பதீனாம் பதயே நமோ நமோ
பப்லுசாய விவ்யாதினேऽன்னானாம் பதயே நமோ நமோ

---

(2) (ஹரிகேசேப்யஃ) பச்சிலைகளைக் கூந்தலாயுடைய (வ்ருக்ஷேப்யஃ) மரங்களின் வடிவினரும் (பசூனாம் பதயே) பிராணிகளின் இரக்ஷகருமான பரமேசுவரனுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(3) (ஸஸ்பிஞ்ஜராய) இளம் புல் போல் மஞ்சள் வாய்ந்த சிவப்பு வண்ணரும் (த்விஷீமதே) காந்தி பொருந்தியவரும் (பதீனாம் பதயே) அர்ச்சிராதி மார்க்கங்களை ரக்ஷிப்பவருமான பரமேசுவரனுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(4) (பப்லுசாய) விருஷபத்தின் மேல் வீற்றிருப்பவரும் (விவ்யாதினே) விரோதிகளுக்கு நோய் செய்பவரும் (அன்னானாம் பதயே) உணவுப்பொருள்களுக்கதிபதியும் ஆகிய பரமேசுவரனுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

---

**2. 1. 3.** ஸஸ்பிம் சப்தோ பாலத்ருண-வாசீ । பீதரக்த-ஸங்கீர்ணவர்ண-வாசீ பிஞ்ஜரஃ । த்விஷீமான்—தீப்திமான் ।

பதீனும்—சாஸ்த்ரோக்த - தக்ஷிணோத்தர-த்ருதீய - மார்க்காணும் பதிஃ ।

**2. 1. 4.** பிபர்த்தி ருத்ரமிதி பப்ருர்-வ்ருஷபஃ ஸ ஏவ பப்லுஃ । தஸ்மின் சேதே திஷ்டதீதி பப்லுசஃ । ஸ ச வித்வேஷிணோ விசேஷேண வித்யதீதி விவ்யாதீ ।

हरिकेशायोपवीतिने पुष्टानां पतये नमो नमो
भवस्य हेत्यै जगतां पतये नमो नमो
रुद्रायाततायिने क्षेत्राणां पतये नमो नमः

ஹரிகேசாயோபவீதினே புஷ்டானும் பதயே நமோ நமோ
பவஸ்ய ஹேத்யை ஜகதாம் பதயே நமோ நமோ
ருத்ராயாததாவினே க்ஷேத்ராணும் பதயே நமோ நமঃ

---

(5) (ஹரிகேசாய) கரிய கேசம் படைத்து நரையற்றிருப்பவரும் (உபவீதினே) பூணூல் விளங்கும் திருமேனியுடையவரும் (புஷ்டானும் பதயே) குண புஷ்டியுடையவர்களின் தலைவருமாகிய பரமேசுவரனுக்கு (நமோ நமঃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(6) (பவஸ்ய ஹேத்யை) ஸம்ஸார விருக்ஷத்தைச் சேதிக்கும் ஆயுதம் போன்றவரும் (ஜகதாம் பதயே) உலக நாயகருமாகிய பரமேசுவரனுக்கு (நமோ நமঃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(7) (ருத்ராய) துன்பத்தைத் துடைப்பவரும் (ஆததாவினே) நாணேற்றிய வில்லைத் தாங்கி உலகை இரக்ஷிப்பவரும், (க்ஷேத்ராணும் பதயே) உடல்களுக்கதிபதியுமான பரமேசுவரனுக்கு (நமோ நமঃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

---

**2. 1. 5.** ஹரிகேசாய—நீலமூர்த்தஜாய, பலிதரஹிதாய |

புஷ்டானும்—பரிபூர்ண-குணும் புருஷாணும்

**2. 1. 6.** பவঃ ஸம்ஸாரஸ்-தஸ்ய ஹேதி-ராயுதம் ; ஸம்ஸாரச்சேத்ரே ருத்ராய |

**2. 1. 7.** ஆததேன விஸ்தாரிதேன தனுஷாऽவதி ரக்ஷதீத்யாததாவீ |

सूतायाहंन्त्याय् वनानां पतंये नमो नमः ॥ २.१ ॥
रोहिताय स्थपतये वृक्षाणां पतंये नमो नमो
मन्त्रिणे वाणिजाय् कक्षाणां पतंये नमो नमो

ஸூதாயாஹந்த்யாய வனானாம் பதயே நமோ நம꞉ ॥ 2.1. ॥
ரோஹிதாய ஸ்தபதயே வ்ருக்ஷாணாம் பதயே நமோ நமோ
மந்த்ரிணே வாணிஜாய கக்ஷாணாம் பதயே நமோ நமோ

---

(8) (ஸூதாய) தேரோட்டியாகவும் (அஹந்த்யாய) இம்சிக்கமுடியாதவராகவும் (வனானாம் பதயே) காட்டரசராகவும் உள்ள பரமேசுவரருக்கு (நமோ நம꞉) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

2. 2. (1) (ரோஹிதாய) சிவந்த நிறத்தினரும் (ஸ்தபதயே) எங்குமிருந்து எல்லாவற்றையும் இரக்ஷிக்கும் பிரபுவும் (வ்ருக்ஷாணாம் பதயே) விருக்ஷங்களுக்குப் பதியுமாக இருக்கும் பரமேசுவரருக்கு (நமோ நம꞉) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(2) (மந்த்ரிணே) மந்திரியாகவும் (வாணிஜாய) வியாபாரியாகவும் (கக்ஷாணாம் பதயே) அடவிகளுக்குப் பதியாகவும் உள்ள பரமேசுவரருக்கு (நமோ நம꞉) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

---

**2. 1. 8.** அஹந்த்ய꞉—வைரிபிர்-ஹந்து-மசக்ய꞉।

**2. 2. 1.** ஸ்தபதி꞉—ப்ரபு꞉ ।

**2. 2. 2.** வனகதா குல்மாதய꞉ கக்ஷா꞉




भुवंतये वारिवस्कृतायौषधीनां पतये नमो नमं
उच्चैर्घोषायाक्रन्दयंते पत्तीनां पतये नमो नमः
कृत्स्नवीताय धावते सत्त्वनां पतये नमः || २.२ ||

புவந்தயே வாரிவஸ்க்ருதாயௌஷதீனும் பதயே நமோ நம
உச்சைர்கோஷாயாக்ரந்தயதே பத்தீனும் பதயே நமோ நமஃ
க்ருத்ஸ்னவீதாய தாவதே ஸத்வனும் பதயே நமஃ || 2.2 ||

---

(3) (புவந்தயே) போஷித்து வளர்ப்பவரும் (வாரிவஸ்க்ருதாய) பக்த பராதீனரும் (ஓஷதீனும் பதயே) செடி, கொடிகளின் பதியுமாகிய பரமேசுவரருக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(4) (உச்சைர்கோஷாய) உறக்கக்கூவுகிறவரும் (ஆக்ரந்தயதே) அழவைப்பவரும் (பத்தீனும் பதயே) காலாட்படையின் தலைவருமான பரமேசுவரருக்கு (நமோ நம) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(5) (க்ருத்ஸ்னவீதாய) சேனைகள் சூழப்பெற்றவரும் (தாவதே) பக்தர்களை ரக்ஷிக்க ஓடுகிறவரும் (ஸத்வனும் பதயே) ஸாதுக்களின் தலைவருமாகிய பரமேசுவரருக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

---

**2. 2. 3.** புவம் தனோதீதி புவந்திஃ |

**2. 2. 4.** ஆக்ரந்தயத்-வைரிணும் ரோதயிதா |

இரண்டாவது அனுவாகம் முழுவதும் ஒரே மந்திரம். ரிஷி மண்டூகர், சந்தஸ் மஹா காயத்ரீ, தேவதை ருத்ரன்.

த்யானம் :—முக்தாலங்க்ருத-ஸர்வாங்க-மிந்து-கங்காதரம் ஹரம் |
த்யாயேத் கல்பதரோர்-மூலே ஸமாஸீனம் ஸஹோமயா ||

இம்மந்திர ஜபத்தால் சத்ரு நாசம், வசீகரணம், ஐச்வரிய லாபம் முதலியவை ஸித்திக்குமெனக் கூறப்பட்டுள்ளது.

**नमः सहमानाय निव्याधिनं आव्याधिनीनां पतये नमो नमः ककुभाय निषङ्गिणें स्तेनानां पतये नमो नमो निषङ्गिणं इषुधिमते तस्कराणां पतये नमो नमो**

நம: ஸஹமாநாய நிவ்யாதின ஆவ்யாதினீநாம் பதயே நமோ ககுபாய நிஷங்கிணே ஸ்தேநாநாம் பதயே நமோ நமோ [நம: நிஷங்கிண இஷுதிமதே தஸ்கராணாம் பதயே நமோ நமோ

---

3.1. (1) (ஸஹமாநாய) விரோதிகளை அடக்குகின்றவரும் (நிவ்யாதினே) எதிரிகளை அடிக்கின்றவரும் (ஆவ்யாதினீநாம் பதயே) எதிரிகளை அடிப்பவர்களின் தலைவரும் ஆகிய பரமேசுவரருக்கு (நமோ நம:) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(2) (ககுபாய) சிறந்தவரும் (நிஷங்கிணே) வாளேந்தியவரும் (ஸ்தேநாநாம் பதயே) கள்வர் தலைவருமாகிய பரமேசுவரருக்கு (நமோ நம:) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(3) (நிஷங்கிணே) வில்வில் தொடுப்பதற்காகக் கையில் அம்பை வைத்துக்கொண்டிருப்பவரும் (இஷுதிமதே) அம்பருத்தூணியை யுடையவரும் (தஸ்கராணாம்பதயே) கொள்ளைக்காரர்களின் தலைவருமாகிய பரமேசுவரருக்கு (நமோ நம:) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

---

**3. 1. 1.** ஸஹமான:—விரோதினோऽபிபவன் | நிதராம் விரோதினோ வித்யதீதி நிவ்யாதீ |

**3. 1. 2.** நிஷங்கீ—நிதராம் ஸங்கீ—(பக்தர்களிடம்) மிகுந்த பிரீதியுள்ளவர். அதனாலேயே, பக்தர்களின் சித்தமறியாதபடி அவர்கள் சித்தத்தில் நின்று இலங்குகிறார்.

ஸ்தேநாநாம் பதயே நம:—கள்வர் தலைவன்—

உ. தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடைய சுடலைப்பொடி பூசி என்னுள்ளங்கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாட் பணிந்தேத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுரமேவிய பெம்மானிவனன்றே.

—சம்பந்தர் தேவாரம்.

**3. 1. 3.** நிஷங்க ஃ—தனுஷி ஸந்தாதும் ஹஸ்தே த்ருதோ பாணஃ। தஸ்கராணும் பதயே நம ஃ—கொள்ளைக்காரர்களின் தலைவன் :—

ஒ. (அம்ருதஞ்சைவ ம்ருத்யுச்ச ஸதஸச்சாஹ-மர்ஜுன)
சாகாமையும் சாவும், இருப்பும் இன்மையும், நல்லதும் கெட்டதும், எல்லாம் நானே. கீ. 9.7.

அவனன்றி யோரணுவு மசையாதெனும் பெரிய
ஆப்தர் மொழி யொன்று கண்டால்
அறிவாவதேது சில வறியாமையேதிவை
யறிந்தார்களறி யார்களார்
மௌன மொடிருந்ததா ரென்போலுடம்பெலாம்
வாயாய்ப்பிதற்றுமவரார்
மனதெனவு மொருமாயை எங்கே இருந்து வரும்
வன்மையொடிரக்க மெங்கே
புவனம் படைப்பதென் கர்த்தவ்ய மெவ்விடம்
பூத பேதங்க ளெவ்விடம்
பொய்மெயித மகித மேல்வரு நன்மைதீமையொடு
பொறை பொருமையு மெவ்விடம்
எவர் சிறிய ரெவர் பெரிய ரெவருறவ ரெவர் பகைஞர்
யாதுமுனையன்றி யுண்டோ
இகபரமிரண்டினிலு முயிரினுக் குயிராகி
எங்கு நிறைகின்ற பொருளே.

ருத்ரோ ஹி லீலயா நட இவ தத்தத் வேஷம் தத்தே। யத்வா தஸ்ய ஸர்வ ஜகதாத்மகத்வாத் யே யத்ர யதா வர்த்தந்தே தத்ர ததா ரூபேண ருத்ரோ வர்த்தத இதி ருத்ரஸ்ய ஸார்வாத்ம்ய-மனுஸந்தாதும் மந்த்ரை-ரேவமுச்யதே। ஸ்தேனுதி சரீரேஷு ருத்ரோ த்வேதா வர்த்ததே ஜீவரூபேண ஈச்வரரூபேண ச। தத்ர ச யஜ் ஜீவரூபம் தத் ஸ்தேனுதி சப்தானும் வாச்யோऽர்த்தஃ। ஸ ஏவ சாஸ்த்ரேஷு நிந்த்யஃ। யத்வீச்வர-ரூபம் தத் ஸ்தேனுதி சப்தை-ரூபலக்ஷ்யதே। ததனுஸந்தானந்து பாப-க்ஷய ஹேதுத்வேன பரமபுருஷார்த்த இதி லக்ஷ்யார்த்த விவக்ஷயா மந்த்ரேஷு லௌகிகாஃ சப்தாஃ ப்ரயுஜ்யந்த இதி த்ரஷ்டவ்யம் ||) ருத்திரன் லீலையாக

वञ्चते परिवञ्चते स्तायूनां पतये नमो नमो

निचेरवे परिचरायारण्यानां पतये नमो नमः

வஞ்சதே பரிவஞ்சதே ஸ்தாயூனும் பதயே நமோ நமோ
நிசேரவே பரிசராயாரண்யானும் பதயே நமோ நமஃ

(4) (வஞ்சதே) வஞ்சகராகவும் (பரிவஞ்சதே) படுவஞ்சகாரகவும் (ஸ்தாயூனும் பதயே) நயவஞ்சனையால் திருடுபவர்களின் தலைவராகவும் உள்ள பரமேசுவரருக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(5) (நிசேரவே) திருடுவதற்காக உள்ளே சஞ்சரிப்பவராகவும் (பரிசராய) திருடுவதற்காக வெளிப்போந்து சஞ்சரிப்பவராயும் (ஆரண்யானும் பதயே) வனங்களில் வழிபறிப்பவர்களின் தலைவராகவும் உள்ள பரமேசுவரருக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

நடிப்பவனைப்போல் அந்தந்த வேஷத்தைத் தரிக்கிறார். அல்லது உலகு எல்லாம் அவர் வடிவே யாதலால் எவரெவர் எங்கெங்கு எப்படியெப்படி இருக்கின்றார்களோ அங்கங்கு அப்படியப்படி ருத்திரரே இருக்கின்றார் என்று ருத்திரருடைய ஸர்வாத்ம தத்துவத்தை அனுஸந்தானம் செய்யும்பொருட்டு மந்திரத்தில் இவ்வாறு கூறப்படுகிறது. திருடர் முதலியவர்களுடைய உடல்களிலும் ருத்திரர் இரண்டுவடிவில் ஜீவரூபியாகவும் ஈசுவர ரூபியாகவும் இருக்கிறார். எது ஜீவரூபமோ அது திருடர் முதலிய சொற்களின் வாச்சியார்த்தம். அதுவே சாஸ்திரங்களில் நிந்திக்கப்படுவது. எது ஈசுவர ரூபமோ அது திருடர் முதலிய சொற்களின் லக்ஷ்யார்த்தம். அங்ஙனம் அனுஸந்தானம் செய்வதால் பாவம் நசித்துப் பரமபுருஷார்த்தம் சித்திக்கும் என்ற நோக்கத்துடன் லௌகிக சப்தங்கள் ருத்திரனிடம் கல்பிக்கப்படுகின்றன என்று உணர வேண்டும்.

—ஸா.

सृकाविभ्यो जिघांसद्भ्यो मुष्णतां पतये नमो नमो
ऽसिमद्भ्यो नक्तं चरद्भ्यः प्रकृन्तानां पतये नमो नम
उष्णीषिणे गिरिचराय कुलुञ्चानां पतये नमो नमः । ३.१ ॥

ஸ்ருகாவிப்யோ ஜிகா ஂஸத்ப்யோ முஷ்ணதாம் பதயே நமோ நமோ

ऽஸிமத்ப்யோ நக்தஞ்சரத்ப்யஃ ப்ரக்ருந்தானும் பதயே நமோ நம

உஷ்ணீஷிணே கிரிசராய குலுஞ்சானும் பதயே நமோ நமஃ ॥

---

(6) (ஸ்ருகாவிப்யஃ) ஆயுதங்களால் தங்களை ரக்ஷித்துக் கொள்பவர்களாகவும் (ஜிகாஂஸத்ப்யஃ) பிறரை இம்சிப்பவர் களாகவும் (முஷ்ணதாம் பதயே) உழவாளியாயிருந்து யஜமானரின் தானியங்களைத் திருடுபவர்களின் தலைவராக வும் உள்ள பரமேசுவரருக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(7) (அஸிமத்ப்யஃ) வாளேந்தியவர்களாகவும் (நக்தஞ் சரத்ப்யஃ) திருடுவதற்காக இரவில் சஞ்சரிப்பவர்களாகவும் (ப்ரக்ருந்தானும் பதயே) பிறரைக்கொன்று பொருளை அப கரிப்பவர்களின் தலைவராகவும் உள்ள பரமேசுவரருக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

---

**3. 1. 6.** ஸ்ருகா சப்தோ வஜ்ரவாசீ । தேன ஸ்வசரீரமவந்தி ரக்ஷந்தீதி ஸ்ருகாவினஃ ।

க்ருஷிகாஃ ஸ்வாமிதான்யாணு-மபஹர்த்தாரோ முஷ்ணந்தஃ ।

**इषुमद्भ्यो धन्वाविभ्यश्च वो नमो नम आतन्वानेभ्यः प्रतिदधानेभ्यश्च वो नमो नम आयच्छद्भ्यो विसृजद्भ्यश्च वो नमो नमो**

இஷு¯மத்ப்யோ தன்வாவிப்யச்ச வோ நமோ நம
ஆதன்வானேப்யஃ ப்ரதிததானேப்யச்ச வோ நமோ நம
ஆயச்சத்ப்யோ விஸ்ருஜத்ப்யச்ச வோ நமோ நமோ

---

(8) (உஷ்ணீஷிணே) தலைப்பாகை யணிந்தவராகவும் (கிரிசராய) மலைவாசியாகவும் (குலுஞ்சானும்) வயல்களிலும் வீடுகளிலும் திருடுபவர்களின் (பதயே) தலைவராகவும் உள்ள பரமேசுவரருக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

3.2. (1) (இஷு¯மத்ப்யஃ) அம்புகளை ஏந்தியவர்களாகவும் (தன்வாவிப்யச்ச) வில்லாளிகளாகவும் விளங்கும் (வஃ) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(2) (ஆதன்வானேப்யஃ) வில்லில் நாணேற்றுகின்றவர்களாவும் (ப்ரதிததானேப்யச்ச) அம்பைத் தொடுக்கின்றவர்களாகவும் விளங்கும் (வஃ) உங்களுக்கு (நமோநம :) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(3) (ஆயச்சத்ப்யஃ) நாணை இழுக்கின்றவர்களாகவும் (விஸ்ருஜத்ப்யச்ச) அம்புகளை எய்பவர்களாகவும் விளங்கும் (வஃ) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

---

**3. 1. 7.** ஹத்வைவாபஹரந்தஃ ப்ரக்ருந்தாஃ |

**3. 1. 8.** சிரோவேஷ்டனவான் உஷ்ணீஷீ |

கும் பூமிம் க்ருஹ-க்ஷேத்ராதி ரூபாம் லுஞ்சந்த்யபஹரந்தீதி குலுஞ்சாஃ |

ऽस्यद्भ्यो विद्ध्यद्भ्यश्च वो नमो नम
आसीनेभ्यः शयानेभ्यश्च वो नमो नमः
स्वपद्भ्यो जाग्रद्भ्यश्च वो नमो नम-
स्तिष्ठद्भ्यो धावद्भ्यश्च वो नमो नमः

ऽஸ்யத்ப்யோ வித்த்யத்ப்யச் ச வோ நமோ நம
ஆஸீநேப்யஃ சயானேப்யச்ச வோ நமோ நமஃ
ஸ்வபத்ப்யோ ஜாக்ரத்ப்யச்ச வோ நமோ நமஸ்
திஷ்டத்ப்யோ தாவத்ப்யச்ச வோ நமோ நமஃ

---

(4) (அஸ்யத்ப்யஃ) குறியை நோக்கி பாணத்தை விடுகின்றவர்களாகவும் (வித்யத்ப்யச்ச) குறியைப்பிளக்கின்றவர்களாகவும் விளங்கும் (வஃ) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(5) (ஆஸீநேப்யஃ) உட்கார்ந்து கொண்டிருப்பவர்களாகவும் (சயானேப்யச்ச) படுத்துக்கொண்டிருப்பவர்களாகவும் விளங்கும் (வஃ) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(6) (ஸ்வபத்ப்யஃ) தூங்குகின்றவர்களாவும் (ஜாக்ரத்ப்யச்ச) விழித்துக்கொண்டிருப்பவர்களாவும் விளங்கும் (வஃ) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

7: (திஷ்டத்ப்யஃ) நின்று கொண்டிருப்பவர்களாகவும் (தாவத்ப்யச்ச) ஓடுகின்றவர்களாகவும் விளங்கும் (வஃ) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

---

**3. 2.** முக்தஸ்ய பாணஸ்ய லக்ஷ்யபர்யந்தம் தமன-மஸனம் தஸ்ய கர்த்தாரோऽஸ்யந்தஃ। லக்ஷ்யே ப்ரவேசோ வேதஃ।

सभाभ्यः सभापतिभ्यश्च वो नमो नमो
अश्वेभ्योऽश्वपतिभ्यश्च वो नमः ॥ ॥ ३.२. ॥

नम आव्याधिनीभ्यो विविध्यन्तीभ्यश्च वो नमो नम
उगणाभ्यस्तृंहतीभ्यश्च वो नमो नमो

ஸபாப்ய꞉ ஸபாபதிப்யச்ச வோ நமோ நமோ
அச்வேப்யோऽச்வபதிப்யச்ச வோ நம꞉ ॥ 3. 2. ॥

நம ஆவ்யாதினீப்யோ விவித்யந்தீப்யச்ச வோ நமோ நம
உகணப்யஸ்-த்ருஂஹதீப்யச்ச வோ நமோ நமோ

---

(8) (ஸபாப்ய꞉) ஸபையில் உள்ளவர்களாகவும் (ஸபாபதிப்யச்ச) ஸபா நாயகராகவும் விளங்கும் (வ꞉) பரமேசுவராகிய உங்களுக்கு (நமோ நம꞉) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(9) (அச்வேப்ய꞉) குதிரைகளாகவும் (அச்வபதிப்யச்ச) குதிரைசவாரி செய்பவர்களாகவும் விளங்கும் (வ꞉) பரமேசுவராகிய உங்களுக்கு (நமோ நம꞉) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

4.1. (1) (ஆவ்யாதினீப்ய꞉) நாற்புறமும் சூழ்ந்து துன்புறுத்தும் சக்தி வடிவங்களாகவும் (விவித்யந்தீப்யச்ச) பலவிதமாய்த்தாக்கிக் கொல்லும் சக்தி வடிவங்களாகவும் உள்ள (வ꞉) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நம꞉) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(2) (உகணப்ய꞉) ஸப்தமாதர்கள் முதலிய சிறந்த சக்தி கணங்களாகவும் (த்ரும்ஹதீப்ய꞉) உக்ர தேவதைகளான துர்க்கை முதலிய வடிவங்களாகவும் உள்ள (வ꞉) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நம꞉) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

गृत्सेभ्यो गृत्सपतिभ्यश्च वो नमो नमो
व्रातेभ्यो व्रातपतिभ्यश्च वो नमो नमो
गणेभ्यो गणपतिभ्यश्च वो नमो नमो
विरूपेभ्यो विश्वरूपेभ्यश्च वो नमो नमो

க்ருத்ஸேப்யோ க்ருத்ஸபதிப்யச்ச வோ நமோ நமோ
வ்ராதேப்யோ வ்ராதபதிப்யச்ச வோ நமோ நமோ
கணேப்யோ கணபதிப்யச்ச வோ நமோ நமோ
விரூபேப்யோ விச்வரூபேப்யச்ச வோ நமோ நமோ

---

(3) (க்ருத்ஸேப்யஃ) விஷயப்பற்றுள்ளவர்களாகவும் (க்ருத்ஸபதிப்யச்ச) விஷயப்பற்றுள்ளவர்களின் தலைவர்களாகவும் உள்ள (வஃ) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(4) (வ்ராதேப்யஃ) பல வகுப்பினர்களின் கூட்டமாகவும் (வ்ராதபதிப்யச்ச) பல வகுப்புக் கூட்டங்களின் தலைவர்களாகவும் உள்ள (வஃ) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(5) (கணேப்யஃ) பிரமதகணங்களாகவும் (கணபதிப்யச்ச) கணங்களின் தலைவர்களாகவும் உள்ள (வஃ) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(6) (விரூபேப்யஃ) விகார ரூபங்களையுடையவர்களாகவும் (விச்வரூபேப்யஃ) எல்லாவிதமான ரூபங்களையுடையவர்களாகவும் உள்ள (வஃ) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

---

4.1. 6. விரூபேப்யோ விச்வரூபேப்ய :— இன்ன உருவம் என்று விவரிக்க இயலாதவராதலால் 'விரூபர்' என்றும், எல்லா உருவங்களும் தாமேயாதலால் 'விசுவரூபர்' என்றுங் கூறலாம்.

महद्भ्यः क्षुल्लकेभ्यश्च वो नमो नमो
रथिभ्योऽरथेभ्यश्च वो नमो नमो रथेभ्यः ॥४.१॥

மஹத்ப்யஃ க்ஷுல்லகேப்யச்ச வோ நமோ நமோ
ரதிப்யோऽரதேப்யச்ச வோ நமோ நமோ ரதேப்யஃ ॥ 4.1 ॥

---

(7) (மஹத்ப்யஃ) மகான்களாகவும் (க்ஷுல்லகேப்யச்ச) அற்பசக்தியுடையவர்களாகவும் உள்ள (வஃ) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(8) (ரதிப்யஃ) தேரில் செல்பவர்களாகவும் (அரதேப்யச்ச) தேரில்லாதவர்களாகவும் உள்ள (வஃ) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நமஃ) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

---

ஓ. விச்வமூர்த்திர்-மஹாமூர்த்திர்-தீப்த மூர்த்தி-ரமூர்த்திமான் ।
அநேக மூர்த்தி-ரவ்யக்தஃ சதமூர்த்திஃ சதானனஃ ॥

—வி.ஸ.

ஓ. மைபடிந்த கண்ணாளுந்தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னினல்லான்
ஒப்புடையனல்லன் ஒருவனல்லன்
ஒரூரனல்லன் ஒருவன் இல்லி

அப்படியும் அந் நிறமும் அவ்வண்ணமும்
அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந் நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே.

—அப்பர் தேவாரம்.

ஓ. ஏதவனூ ரேதவன்பே ராருற்றா ராரயலார்
ஏதவனைப் பாடும் பரிசேலோ ரெம்பாவாய்.

—திருவெம்பாவை

रथंपतिभ्यश्च वो नमो नमः
सेनाभ्यः सेनानिभ्यंश्च वो नमो नमः
क्षत्तृभ्यः संग्रहीतृभ्यंश्च वो नमो नम-
स्तक्षंभ्यो रथकारेभ्यंश्च वो नमो नमः

ரதபதிப்யச்ச வோ நமோ நம꞉
ஸேனுப்ய꞉ ஸேனுனிப்யச்ச வோ நமோ நம꞉
க்ஷத்ருப்ய꞉ ஸங்க்ரஹீத்ருப்யச்ச வோ நமோ நமஸ்-
தக்ஷப்யோ ரதகாரேப்யச்ச வோ நமோ நம꞉

---

4.2. (1) (ரதேப்ய꞉) தேர்களாகவும் (ரதபதிப்யச்ச) தேர்களின் தலைவர்களாகவும் உள்ள (வ꞉) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நம꞉) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(2) (ஸேனுப்ய꞉) சேனைகளாகவும் (ஸேனுனிப்யச்ச) சேனைத்தலைவர்களாகவும் உள்ள (வ꞉) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நம꞉) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(3) (க்ஷத்த்ருப்ய꞉) தேர்களை ஒழுங்காக ஓட்டுகிறவர்களாகவும் (ஸங்க்ரஹீத்ருப்யச்ச) இழுத்துப்பிடித்து நிறுத்துகிறவர்களாகவும் உள்ள (வ꞉) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நம꞉) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

(4) (தக்ஷப்ய꞉) தச்சர்களாகவும் (ரதகாரேப்யச்ச) தேர் செய்கிறவர்களாகவும் உள்ள (வ꞉) பரமேசுவரராகிய உங்களுக்கு (நமோ நம꞉) முன்னும் பின்னும் நமஸ்காரம்.

